# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

ஆசிரியர்கள்
திருலோக சீதாராம் — அ. வெ. ர. கிருஷ்ணசாமி.





3000 ஆண்டுகளுக்கு முன் நமது நாகரீகம்

## காவிரிக்கு



காடு கழனியும் மேடுங் கடந்திங்கு
காவிரி பாயுது பார் !
மேடு திருத்திய மேழியர் வாழ்
வினில்மேன்மை கொழிக்குது பார்

செந்நெல் விளைந்திடக் கன்னல்
விளைந்திடச்
சேமம் பெருகுது பார் !
வந்து வளங்கள் பெருக்கிக்
கொடுத்திடும்
வற்றிடாக் காவிரி பார் !

பஞ்சம்பறந்திடப்பண்புசிறந்திடப்
பாயுது காவிரி பார் !
விஞ்சும் மயக்குடன் துஞ்சும்
கருவண்டின்
வீணை இசையினைக் கேள் !

குடஅல்பிறந்ததுகுன்றுகள் தாவிக்
குதித்து வருகுது பார் !
இடமெலாம் காடு, கழனிகள் ஆக்கி
இணையிலை என்குது பார் !

அன்னை நம்காவிரிக்(கு) அஞ்சலி
ஆயிரம்
ஆடி பதினெட்டாம் !

அன்னை மகிழ்ந்தே அருளைச்
சுரந்தனள்
அஞ்சலி செய்திடுவோம் !

வற்றாதகாவிரிவாழ்கவேவாழ்கென
வாயார வாழ்த்திடுவோம் !
மற்றும் அவள்திருமுன்றில் இதய
மலர்களைத் தூவிடுவோம்.

— .க. பஞ்சவர்ணம்


19–8–56

1 அணா

# மந்திரி பேசுகிறார்

—பரதேசி

“மந்திரிக் கழகு முரண் மொழி கழறுதல்” என்ற புதுமொழி இன்னும் அவ்வளவாகப் பரவவில்லை! எங்கேயாவது எதையாவது “மைக்”கின் எதிரில் அல்லது பத்திரிகை நிருபர்களுக்குமுன். முன்னுக்குப் பின் தொடர்பில்லாமல் ஒருவர் சொல்லிக்கொண்டிருந்தால் அவரைச் சுலபமாக “மந்திரி” என்று அடையாளம் கண்டு பிடித்து விடலாம்!

குழந்தைகளுக்குப் பால் வழங்கும் விழாவில் **விளையாட்டு மந்திரி** பேசுகிறார்:—“தாய்மார்களே! சுதந்திர நாட்டின் எதிர்கால ஜனாதிபதிகளே! தற்போதைய குழந்தைகளே!—நீங்களெல்லோரும் நிறையப் **பசும்பால்** குடிக்கவேண்டும். **பால் குடிப்பது உடம்புக்கு நல்லது.** நான் சின்னஞ் சிறுவயதில் நிறையப் பால் குடிப்பேனாம்—அழவேமாட்டேனாம்; எனக்கு ஒரு தடவை என் அம்மா கழுதைப் பால் கூடப் போட்டியதாகக் கூறுவதுண்டு (கைதட்டல்—பலத்த ஆரவாரம்) நிற்க! “நாட்டில் எங்கே பார்த்தாலும் டீக்கடைகளும் காபி ஹோட்டல்களும் பரவிவிட்டன. அதனால் நல்ல பால் கிராமங்களில் கூடக் கிடைக்காமல் போய்விட்டது! முதலில் இந்த டீ கடைகளையும் ஹோட்டல்களையும் மூடினால்தான் நாடு உருப்படும்: சர்க்கார் இதுசம்பந்தமாகக் கூடிய விரைவில் ஒரு அறிக்கை வெளியிடும்! (பீதி–கலவரம் த்ஸொ–த்ஸெள)

பிரபல காபி & சாப்பாடு ஹோட்டல் பிரம்மானந்தபவனைத் திறந்து வைத்துச் **சாப்பாட்டு மந்திரி** பேசுகிறார் :—

விருந்தோம்புதல் நம் நாட்டின் சிறந்த பண்பாடு, தற்காலத்தில் இந்தப் பணியைப் பெரும்பாலும் காபி & சாப்பாடு ஹோட்டல்களே திறம்பட நடத்தி வருகின்றன. ஹோட்டல்கள் தாம் நம் நாட்டின் முழுமுதல் தேவை. அவை நம் கிராமங்களிலும் பரவவேண்டும். ஏழை பணக்காரன் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடின்றி எல்லோரும் கலந்து பழக இத்தகைய ஹோட்டல்கள் கிராமங்கள் தோறும் கூடப் பரவவேண்டும். சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் இந்தப் பிரம்மானந்த பவனுக்கு ஏதாவது பொருளாதார உதவி செய்ய முடியுமானால் எவ்வளவோ மகிழ்ச்சிகரமாயிருக்கும். இது பற்றி மாகாண சர்க்கார் மத்ய சர்க்காருக்குக் கூடிய விரைவில் ஒரு சிபாரிசுக் கடிதம் அனுப்பும் என்பதை நீங்கள் நம்பலாம்! வாழ்க வயிறு!! சங்கீத சபையொன்றில் கலாசார மந்திரி பேசுகிறார்;—

“நம் நாடு கலைகளிற் சிறந்தது என்றால் அது மிகைபடாத ஒன்று. நம் நாட்டில் ஆயகலைகள் அறுபத்துநான்கினையும் ஏய உணர்விக்க வல்லவர்கள் பல்லாயிரம் பேர்களிருக்கிறார்களென்றால் அது முற்றிலும் உண்மையே தவிர வேறொன்றல்ல. நாமெல்லோருமே இசையைப் பயிலவேண்டும். பிறக்கும்குழந்தை அழவில்லை. அது இசை பாடுகிறது. கழுதை கத்தவில்லை. அது சுதி சேர்க்கிறது. சங்கீதம் என்பது கடலைப் போன்றது; வங்காளக்குடாக்கடலைவிட விரிவானது. சங்கீதத்தைப்பற்றி இன்னும் என்னென்னவோ சொல்லிக்கொண்டு போகலாம்....ஆனால் நான் மற்றோரிடத்தில் விஞ்ஞானவளர்ச்சிக் கழகத்தில் பேசவேண்டியிருப்பதால்........ **பொழுது போக்கு மந்திரி** ஒரு நூல் நிலையத்தைத் திறந்து வைக்கிறார்;—

“மக்களே! (உங்களை நான் மாக்கள்என்றழைக்கவில்லை!) அறிவைப் பெருக்கிக் கொள்ளுங்கள்! ஸர்தார் வல்லபாய் படேல் நாளொன்றுக்கு 17 மணி நேரம் நூல் நிலையத்திலிருந்து படித்து வந்திருக்கிறார். புத்தகங்கள் பேசும் ஆசிரியர்கள்—நடமாடும் தெய்வங்கள்! கிடைக்காத பொக்கிஷங்கள்!— இன்னும் என்னென்னவோ.......... மனிதன் சிந்திக்கும் பிராணியாதலால் அவன் சிந்தனா சக்தியைத் தூண்டப் புத்தகங்கள் இன்றியமையாதவை அன்றோ! ஆகையால் உங்களை நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால்....... (தயவுசெய்து சங்கீத ரசிகர்கள் மன்னிக்க) உங்கள் பொழுதை வீண் அரட்டையாலும் சீட்டாட்டத்திலும் சங்கீத சபைகளிலும் போக்குவதைவிட இத்தகைய நூல் நிலையங்களில் போக்குதல்நல்லது குறிப்பாக ஏதோ ஒருசில அடிகளைத் திருப்பித் திருப்பிப் பாடி அதற்கு நிரவல் ஸ்வரமென்று எதையோ இழுத்துப் பக்க வாத்தியங்களைவேறு வைத்துக்கொண்டு ரகளை செய்யும் சபைகளில் ஒருநாளும் வீண் பொழுது போக்காதீர்கள்!........

**தூக்க மந்திரி** ஐயனார்கோயில் புதுக் குதிரை (மண் குதிரை தான்) விடும் விழாவில் பேசுகிறார்:- “ஐயன்மீர்! நம் நாட்டில் வரவரக் கடவுள் பக்திக்கு “ரேஷன்” வந்துகொண்டிருக்கிறது. மனிதன் படித்து முன்னேறக் கடவுளே இல்லையென்று சாதிக்கும் நிலைக்கு வருவானானால் இந்தக் கல்வி நிலையங்கள் எல்லாவற்றையுமே மூடிவிட்டு அங்கே இந்த மாதிரி மண் குதிரைகளை நிறைய நிறுத்தி வைக்கலாம். இல்லையானால் நாட்டு மக்கள் நன்கு தூங்கி ஓய்வு பெற வசதி அளிக்கலாம். குதிரை மனத்தின் சின்னம். மனக் குதிரையின் கடிவாளத்தை இறுக்கிப்பிடிக்க வேண்டுமென்று கீதையில் கண்ணன் (எங்கேயோ) சொல்லியிருக்கிறார். மனக் குதிரையை மனிதன் அடக்கியாள வேண்டும். சித்தத்தை அடக்காதவனுக்குச் சொர்க்கமில்லை!.. ஆகையால் நம் ஐயனார் கோவில் மண் குதிரை...

இப்படியாகத்தானே மந்திரிகள் முழங்க முழங்க மக்களின் மூளை குழம்பிவிட்டதென்று சித்ரகுப்தன் சொல்ல யமதர்ம ராஜன் “அப்படியா!” என்று வியந்தான்!

---

# மூலதனப் பொருள்கள்

குறிப்பு:—

தொழில் துறையில்—கச்சாப்பொருள், யந்திரம், உற்பத்தியாகும் சரக்கு என்று மூன்று அம்சங்கள் அடிப்படையாக இருக்கின்றன. பருத்தியை ஆலை நூற்றுக் கொடுக்கிறது. பருத்தி கச்சாப் பொருள், ஆலை கருவிப் பொருள், நூல் உற்பத்திப் பொருள். ஆனால் நூற்புத் தொழிலின் வளம் என்பது இந்த மூன்றில மட்டும் அடங்கி விடாது. மூலதனப் பொருள் என்று மற்றொரு அடிப்படை பலம் நமக்கும் இருந்தால்தான் நூற்புத்தொழிலின் வளர்ச்சியும் லாபம் உண்மையாகவே நமது நாட்டிலேயே தங்கி நிற்கும். இல்லாவிட்டால் நூற்பு ஆலைத்தொழில சிறுகச்சிறுக நாம் பெறுகின்ற லாபம் அனைத்தும் ஒரே மூட்டையாகக் கட்டி வெளிநாட்டுக்கு அனுப்பித்தீர வேண்டிய நெருக்கடி ஒன்று வரும் அதுதான். நூல்நூற்கும் யந்திரம் தேய்ந்து பயனற்றுப் போகும்போது மறுபடியும் புதிய யந்திரம் வாங்கவேண்டிய சமயம் எனவே நம் நாட்டிலேயே நூற்பு ஆலைக்கு வேண்டிய யந்திரங்களையும் நாமே இங்கே உற்பத்தி செய்து கொள்ளுகின்ற ஒரு யந்திரம் வேண்டும், இதுதான் மூலதனப்பொருள் என்பது. பொருள் உற்பத்தி செய்யும் யந்திரங்களைவிட அந்த யந்திரங்களையே உற்பத்தி செய்யும் யந்திரங்களைத்தான மூலதனப் பொருள் என்று சொலகிறார்கள். இனி படியுங்கள்.

—ஆசிரியர்

இரண்டாவது திட்டத்தில் தொழில் துறைக்கு அதிக முக்யத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தியா புதிது புதிதாக அதிகத் தொழில்களை ஏற்படுத்துவதுடன் மாத்திரம் நின்றுவிடவில்லை. இன்னும் பல தொழில்களை ஏற்படுத்துவதற்கு வேண்டிய மூல யந்திரங்களைத் தயாரிக்கிற தொழில்களையும் அது ஏற்படுத்தி வருகிறது. அதனால் எதிர்காலத் தொழில் அபிவிருத்திக்கு இப்போது அடிகோலப்படுகிறது.

பல வருஷங்களுக்கு முன், இந்தியா சுதந்திரமடைந்ததற்கு முன்பும் இரண்டாவது உலக யுத்தத்துக்கு முன்பும், இந்தியா பெரும்பாலும் தயாரிப்புப் பொருள்களை இறக்குமதி செய்கிற ஒரு நாடாகவும் கச்சாப் பொருள்களை ஏற்றுமதி செய்கிற ஒரு நாடாகவும் இருந்து வந்தது, சுதந்தரத்துக்குப் பிறகு அந்த நிலைமை மாறிவிட்டது. தயாரிப்புப் பொருள்கள் விஷயத்தில் இந்தியாவின் இறக்குமதி மிகக் குறைந்த பக்ஷத்துக்கு வந்துவிட்டது மட்டுமின்றி இப்போது மின்சார விசிறிகள், தையல் யந்திரங்கள், சைக்கிள்கள், மின்சார மோட்டார்கள், மின்சார விளக்குகள் போன்ற எஞ்சினீயரிங் பொருள்கள் உட்பட தயாரிப்புப் பொருள்களை ஏராளமான அளவில் இப்போது இந்தியா வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வருகிறது. ஆயினும் தொழில்துறைநடவடிக்கைகள் அதிகரிக்க அதிகரிக்க யந்திர சாதனங்கள், தொழிற்சாலை யந்திரங்கள், உபகரணங்கள் ஆகியவற்றின் இறக்குமதிகளும் அதிகரித்துள்ளன, இரண்டாவது திட்ட காலத்தில் இத்துறையில் உள்நாட்டு உற்பத்தியும் கணிசமாக அதிகரித்துவிடும்.

### முதல் 5 வருட திட்டத்தில்

முதல் திட்ட இறுதியில் இந்தியா ஏற்கனவே பலகோடி ரூபாய் மதிப்புள்ள பலரக யந்திர சாதனங்களையும் உபகரணங்களையும் தயாரித்து வந்திருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. உதாரணமாக, உருக்கு செய்வதற்கான புதிய உலை(பிளாஸ்ட் பர்னேஸ்) ஒன்றும் கந்தகத் திராவக உற்பத்தி யந்திரம் ஒன்றும், ஆரம்பத்தில் உருவம் அமைப்பது முதற்கொண்டு இறுதி தயாரிப்பு வரையில் இங்கேயே தயாரிக்கப்பட்டிருக்கிறது. முதலாவது திட்ட காலத்தில் 11 கோடி ரூபாய் மதிப்புள்ள ஜவுளி யந்திர சாதனங்கள் இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டன. 1946-50 கால அளவில் தயாரிக்கப்பட்டவைகளின் மதிப்பு 4 கோடி ரூபாய்தான். 1955ல் ரிங் ஸ்பின்னிங் பிரேம்கள் 'கார்டிங்' எஞ்சின்கள் ஆகியவற்றின் உற்பத்தி அதிகரிக்கப்பட்டது, நடுத்தர பிரேம்கள் தயாரிப்பு வேலைகள் அப்போது ஆரம்பிக்கப்பட்டன. தானே இயங்கும் தறிகளைத் தயாரிப்பதற்குத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. மற்றொரு முக்கியதொழிலான சணல் தயாரிப்புத் தொழிலுக்குத் தேவைப்படுகிற நவீன யந்திர சாதனங்களைத் தயாரிக்கக்கூடிய கட்டத்தை இப்போது இந்தியா அடைந்திருக்கிறது. சென்ற வருஷம் உற்பத்தி செய்யப்பட்ட சணல் தயாரிப்பு யந்திர சாதனங்களின் மொத்த மதிப்பு 11·52 லட்சம் ரூபாயாகும்.

வேறு சில தொழில்களுக்காக 1955ல் உற்பத்தி செய்யப்பட்ட யந்திர சாதனங்களின் மதிப்பு விவரம் வருமாறு!– தேயிலைத் தயாரிப்பு யந்திர சாதனங்கள் ...67,5 லட்சம் ரூபாய்: ஏர்கண்டிஷன் சாதனங்கள் 41 லட்சம் ரூ, சிமிட்டித் தயாரிப்பு யந்திரங்கள் 34 லட்சம் ரூபாய் சர்க்கரை உற்பத்தி யந்திர சாதனங்கள் 19 லட்சம் ரூபாய். அரிசி, பருப்பு, மாவு முதலியவை அரைக்கும் யந்திர சாதனங்கள் 6 லட்சம் ரூபாய், மின்சார டிரான்ஸ்பார்மர்கள் 3·5 கோடி ரூபாய், மின்சார மீட்டர்கள் 3 கோடி ரூபாய் கண்ட்ரோல் கீயர்—ஸ்விட்ச் கீயர்—40 லட்சம் ரூபாய், யந்திரக் கருவிகள் 68 லட்சம் ரூபாய்.

இவ்வாறாக, மூலதனச் சரக்குகள் தயாரிப்புத்துறை அதன் அபிவிருத்தியின் முதலாவது கட்டத்தைப் பூர்த்தி செய்துவிட்டு, இரண்டாவது ஐந்தாண்டுத்திட்ட காலத்தில் மேலும் அதிகப் பொறுப்பை ஏற்பதற்கு வேண்டிய அனுபவத்தையும் பெற்றிருக்கிறது

### மேலும் வளர்ச்சி

இரண்டாவது திட்ட காலத்தில் பருத்தி, சணல். ஜவுளிகள் சர்க்கரை, காகிதம், சிமிட்டி, பால்பண்ணை சாதனங்கள், விவசாயத்துறை யந்திர சாதனங்கள், ரஸ்தா அமைக்கும் யந்திர சாதனங்கள் போன்ற பல்வேறு தொழில்களுக்குமான யந்திர சாதனங்கள் ஏற்படுத்திகணிசமாகஅதிகப்படுத்தப்படும் அல்லது அபிவிருத்தி செய்யப்படும்,

மேலே கூறப்பட்டுள்ளபடி சில சிமிட்டித் தயாரிப்பு யந்திர சாதனங்களும் சர்க்கரை உற்பத்தி யந்திர சாதனங்களும்இந்தியாவில் ஏற்கனவே தயாரிக்கப்பட்டு வருகின்றன. சிமிட்டி யந்திர சாதனங்களைச் சேர்ந்த (சரளை குளிர்விப்பு சாதனம்) 'கிளிக்கர் கூலர்ஸ்' (சரளை உடைக்கும் சாதனம்) 'கிளிக்கர் பிரேக்கர்ஸ்' ஆகியவற்றின் உற்பத்தி இங்கு முதல் தடவையாக 1955ல் ஆரம்பிக்கப்பட்டது, சிமிட்டித் தொழிற்சாலை யந்திரங்கள் முழுவதையும் தயாரிப்பதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டு வருகின்றன. சர்க்கரை ஆலை யந்திரங்கள் முழுவதையும் தயாரிப்பதற்கான திட்டங்கள் இப்போது நிறைவேற்றப்பட்டு வருகின்றன. சர்க்கரை ஆலை யந்திரங்களைத் தயாரிப்பதற்கு நான்கு ஸ்தாபனங்களுக்கு லைசென்சுகள் கொடுக்கப்பட்டுள்ளன. அந்த ஸ்தாபனங்கள் இரண்டாவது திட்ட இறுதியில் எட்டு முழு சர்க்கரை ஆலைகளுக்குத் தேவைப்படுகிற யந்திர சாதனங்களைத் தயாரிக்கக்கூடிய சக்தியைப் பெற்றுவிடும்.

நதிப்பள்ளத்தாக்குத் திட்ட வேலைகளுக்குத் தேவைப்படுகிற கனரக மண்வெட்டி யந்திர சாதனங்கள் யந்திரக் கருவிகள் ஆகியவற்றின் உற்பத்தியை எந்த வகையில் அபிவிருத்தி செய்யலாம் என்பது பற்றி நிபுணர்கள் ஆராய்ந்து வருகின்றனர். அந்நிபுணர்கள் செய்யும் சிபாரிசுகள் இந்த முக்கியமான தொழில்களை விஸ்தரிப்பதற்கும் அபிவிருத்தி செய்வதற்குமான திட்டங்களை வகுப்பதற்கு சர்க்காருக்கு உதவியாக இருக்கும்.

பெரிய எஞ்சினீயரிங் பட்டறைகளில் உலோகப் பக்குவத் தொழிற்சாலைகளிலும் நிர்மாணிக்கப்பட்டுள்ள யந்திரக் கருவிகள்பற்றி வர்த்தக தொழிலியல் மந்திராலயத்தைச் சேர்ந்த அபிவிருத்திப் பிரிவு நடத்திய ஒரு விரிவான கணக்கெடுப்பு வேலை பூர்த்தியாகிவிட்டது. அந்தக் கணக்கெடுப்பு விவரங்கள் யந்திரக் கருவிகள் நிபுணர் கமிட்டியிடம் கொடுக்கப்பட்டுள்ளன. பல்வேறு ரகங்களிலும் அளவுகளிலும் யந்திரக் கருவிகளை உற்பத்தி செய்வதற்கான விரிவான தயாரிப்புத் திட்டம்

(10ம் பக்கம் பார்க்க)

# இந்தியக் கல்வி நிலை

**பாரத அரசாங்கக் கல்வித்துணையமைச்சர் இந்தியக் கல்வித்துறைபற்றிக் கூறுவதாவது**

சுதந்திர தினம் கொண்டாடப்படுகிற சந்தர்ப்பத்தில் நம் நாட்டில் இதுவரையில் நடந்துள்ள முன்னேற்றத்தை பரிசீலித்து ஒவ்வொரு துறையிலும் இன்னும் என்ன செய்ய வேண்டியிருக்கிறதென்பதை நிர்ணயிக்க வேண்டும். அவ்வாறு கவனிக்கும்போது கல்வித் துறையில் நாம் அதிகமாக இன்னும் எவ்வளவோ செய்யவேண்டியிருக்கிறதென்பது புலப்படும். கல்வித் துறையில உள்ள பிரச்னைகள் மிகவும் சிக்கலானவையாக இருக்கின்றன.

இந்தியாவில் கல்வித் துறையிலுள்ள மிக முக்கியமான அவசரப்பிரச்னை, அரசியலமைப்புத் திட்டத்தில் கண்டுள்ளபடி 14 வயதுவரை உள்ள சிறுவர்களுக்குக் கட்டாய இலவசக் கல்வி அளிப்பதாகும். அரசியலமைப்புத் திட்டத்தில் அவ்வாறு கூறப்பட்டிருப்பதால் மாத்திரம் அது அவசியமென்பதில்லை, ஒரு ஜனநாயக சமூகத்திற்கே அவ்வாறு இலவசக் கட்டாயக் கல்வி அளிக்கவேண்டியது தர்மரீதியான கடமையாகும்.

ஜனநாயகத்தின் லட்சியம் தனி பூரண வளர்ச்சிதான். ஜனநாயக சமுதாயத்தில் கோடிக்கணக்கான குழந்தைகள் பள்ளிக்கூடம் செல்லமுடியாமல் இருப்பதும், பெரும்பாலான மக்கள் எழுத்தறிவில்லாதவர்களாயிருப்பதும், ஜனநாயக அமைப்பு சரிவர இயங்குவதற்குத் தடையாக இருக்கும். ஒரு ஜனநாயக சமுதாயத்தில் பேச்சு சுதந்திரம், கூட்டம்கூடும் சுதந்திரம், வழிபாட்டுசுதந்தரம், வோட்டு சுதந்திரம், தேசக் கொள்கையை நிர்ணயிப்பதற்குரிய சுதந்திரம் முதலியவை எல்லாம்–அடிப்படை உரிமைகளெல்லாம்– வழங்கப்பட்டிருப்பது, மக்கள் தங்கள் சூழ்நிலைகளையும், பிரச்னைகளையும் உணரமுடியாமல் இருந்தால், நிஷ்பிரயோஜனமாகிவிடும்,

ஒரு ஜனநாயக சமுதாயத்தில் அடிப்படை உரிமைகளை மக்கள் பயன்படுத்துவது சாத்தியமாகவேண்டுமானால், அவர்கள் ஒருவரோடொருவர் தொடர்பு வைத்துக்கொள்ளவும், ஒன்றுசேர்ந்து சிந்திக்கவும், காரியங்களைக் கூட்டாக முடிவுசெய்யவும் வழியிருக்க வேண்டும். ஜனநாயக சமுதாயம் சரிவர இயங்குவதற்குக் கல்வியறிவு ஒரு இன்றியமையாத ஒரு அடிப்படைத் தேவையாகும். இந்தியாவும் இதர மேனாடுகளைப்போல் கட்டாய இலவசக் கல்வியை ஏற்படுத்திக் கல்விப்புரட்சி செய்தாக வேண்டும்;

கல்வியைப் பொறுத்த மட்டில் இரண்டாவது திட்டத்தில் நம்பிக்கையும் ஊக்கமும் அளிக்கக்கூடிய நிலைமை உருவாகவில்லையென்றே கூறவேண்டியிருக்கிறது. அரசியலமைப்புத் திட்டத்தில் விதிக்கப்பட்ட லட்சிய அளவானது மேலும் பின்னுக்கே போய்க் கொண்டிருக்கிறது. நாம் இப்போது முன்னேறுகிற வேகத்தைப் பார்த்தால் அரசியலமைப்புத் திட்டத்தில் இடப்பட்டுள்ள கட்டளை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில்கூட நிறைவேறுமென்று தோன்றவில்லை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் 6–11 வயதுப் பிரிவிலுள்ள குழந்தைகளில் 62.7%–க்குத்தான் பள்ளிக்கூட வசதி செய்ய முடியும்; 11—14 வயதுப் பிரிவுக் குழந்தைகளில் 22,5%—தினருக்கே பள்ளிக்கூட வசதி செய்ய முடியும்.

### ஆரம்பக்கல்வி

ஆரம்பக் கல்வி விஷயத்தில் முற்போக்கு இவ்வளவு மந்தமாக இருப்பதானது அரசியலமைப்புத் திட்டத்தில் விதிக்கப்பட்டுள்ள சர்க்காருக்குப் பெரிய கவலையைத் தருகிறது ஸ்தல சமூகம் இதற்குப் பொறுப்பெடுப்பது விரும்பத்தக்கதுதான். நமது மக்கள் கல்வி அபிவிருத்தித் திட்டங்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டியதுதான்; ஆனால் இறுதியாக ஆரம்பக் கல்வியின் பொறுப்பு சர்க்காராலேயே ஏற்கப்படவேண்டும்; சர்க்காரென்பதில் மத்திய சர்க்காரும், ராஜ்ய சர்க்கார்களும் அடங்குவார்கள். அரசியலமைப்புத் திட்டத்தின் கட்டளையை நிறைவேற்றுவதற்கு அவர்கள் தங்கள் நிதி வசதிகளையெல்லாம் கூட்டாகத் திரட்டவேண்டும்.

ஆரம்பக் கல்வி விஸ்தரிப்பை ஸ்தல ஸ்தாபனங்கள் அல்லது ராஜ்ய சர்க்கார்கள் முழுப் பொறுப்பில் விட்டுவிடுவதற்கில்லை. சில ராஜ்யங்கள் ஏற்கனவே தங்கள் பட்ஜெட்டில் 20 சதவிகிதத்துக்கு அதிகமான தொகையைக் கல்விக்காகச்செலவிட்டு வருகின்றன. இன்னும் அதிக பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துவதற்குக் கூடுதலாய் நிதி திரட்ட அவர்களுக்கு உண்மையிலேயே கஷ்டமிருக்கும். அதுவுந் தவிர, சிலராஜ்யங்கள் பொருளாதார நிலையில் பிற்போக்காக இருக்கின்றன. எதிர்காலத்தில் அதிக அபிவிருத்தியடைவதற்குப் போதிய இயற்கை வளமும் அவைகளுக்கில்லை,

ஆரம்பக் கல்வியைப் பொறுத்தமட்டில் ஒரு ராஜ்யத்துக்கும் இன்னொரு ராஜ்யத்துக்குமிடையே கல்வித்தரம் வித்தியாசமாக இருந்து, அதனால் குழந்தைகளின் கல்வித் தரத்தில் வித்தியாசமிருக்கும்படி தேசம் பார்த்துக் கொண்டிருக்க முடியாது; பொருளாதார வசதிகள் தட்டுப்பாடாயிருப்பதால் அந்த நிலைமை ஏற்படக் கூடாது. எனவே, மத்திய சர்க்கார் நாடு முழுவதிலும், கல்வி வசதிகளையும் கல்விக்கான சந்தர்ப்பங்களையும் சமப்படுத்தி, அரசியலமைப்புத் திட்டத்தில் விதிக்கப்பட்டுள்ள கட்டளையை நிறைவேற்றுவதற்கு தங்களுக்குரிய பொறுப்பேற்றாக வேண்டும்.

### கருவிமொழி

நமது கல்வி நிலையங்களில் என்னென்ன மொழிகள் போதன மொழிகளாகக் கையாளப்படவேண்டுமென்று நிர்ணயிப்பது சர்க்காருக்கு சிக்கலான பிரச்னையாக இருக்கிறது. இப்பிரச்னையைப் பகுத்தறிவுக்கண் கொண்டு பார்த்து முடிவுசெய்ய வேண்டும். தாய்பாஷை அல்லது பிரதேச பாஷை போதன பாஷையாக இருக்கவேண்டுமென்பது அநேகமாய் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்டது. ஏதோ ஒன்றிரண்டு பள்ளிக்கூடங்களில் ஆங்கிலம் ஆரம்ப, செகண்டரி கட்டங்களில் போதன பாஷையாக இன்னும் இருந்து வருகிறது, ஆனால், எல்லா ராஜ்யங்களும் தாய்பாஷை அல்லது பிரதேச பாஷையை போதன பாஷையாக ஏற்படுத்தி விட்டன. இதில் அபிப்பிராய பேதமே இல்லை. அகில உலகத்திலும் தாய்பாஷை அல்லது பிரதேச பாஷைதான் ஆரம்ப, செகண்டரி கட்டங்களில் பாடங்களைப் போதிப்பதற்கு மிகவும் ஏற்ற பாஷை என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது,

ஆனால் ஹிந்தி ஆங்கிலம் ஆகியவை விஷயத்தில் இதே போல் ஏகோபித்த அபிப்பிராயம் இல்லை. ஹிந்தி இந்தியாவிலுள்ள பாஷைகளில் மிகப் புராதனமானது என்பதற்காகவோ அல்லது வளம் மிக்கது என்பதற்காகவோ உத்தியோக பாஷையாக ஒப்புக்கொள்ளப்படவில்லை; ஆனால் தேசத்திலுள்ள பெரும்பாலான மக்களால் பேசப்படுகிறதும், பெரும்பாலார்க்குப் புரிகிறதுமாக இருப்பதால் அது இந்தியாவின் உத்தியோக வ்யவகார பாஷையாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. உத்தியோகக் காரியங்களுக்கு உபயோகப்படுகிற பாஷையாக மாத்திரமில்லாமல் பல்வேறு பாஷைத் தொகுதிகளைச் சேர்ந்த மக்களிடையே பரஸ்பரத் தொடர்பு ஏற்படுவதற்கு வசதியான ஒரு பாஷையும் நாம் தெரிந்தெடுக்க வேண்டும். இந்நாட்டில் இதுவரையில் கல்வியானது குறிப்பான சில பிரிவினரிடையே பரவியிருந்தது.

பாமர ஜனங்களிடையே கல்வி பரவும்போது பல்வேறு பாஷைத் தொகுதிகளிடையே பரஸ்பரப் பேச்சுத் தொடர்பின் அவசியம் கட்டாயம் ஏற்படும். நாம் பல்வேறு பாஷை

[9ம் பக்கம் பார்க்க]

தராசு —ரெட்டியார்

# இன்றைய இலக்கணம்

இலக்கிய அன்பர் ஒருவர் தராசிடம் வந்து குறைப்பட்டுக் கொண்டார். இன்றைய இலக்கியத்தைப்பற்றி விமரிசிக்கும்படியும் கேட்டுக் கொண்டார்.

தராசு சொன்னதாவது:- நண்பரே! அந்தக் காலத்திலிருந்து ஆண் பெண்ணை வைத்துத்தான் இலக்கியம் உருவாயிற்று. மனிதர்களுக்குத்தான் இலக்கியமே தவிர மாடுகளுக்கும், ஆடுகளுக்குமல்ல, எனவே மனித வாழ்வின் சம்பவங்களை வைத்தோ, கற்பனையாக சிந்தித்தோ, இலக்கியத்தை உருவாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

பழந்தமிழ் இலக்கியங்களில் ஆண் பெண்ணைப்பற்றிய வர்ணனைகளும் காதல் காட்சிகளும் அளவிறந்து இருந்தாலும் அவை அந்தக் காலத்தின் பழக்க வழக்கங்களை ஒட்டி அமைக்கப்பட்டவை. ஒரு சிலரே படித்து அனுபவிக்கவும் அந்த நூல்கள் உருவாக்கப்பட்டவை. அந்தக் காலத்தில் படித்தவர்கள் மிகவும் குறைவு.

கேட்பவர்களில், படிப்பவர்களில், பெண் மக்களும் இருக்கக்கூடுமல்லவா? பச்சையான உண்மைகளை இடக்கரடக்கல் என்ற விதியின் பிரகாரம் சற்று மூடிவைத்தும் இலக்கியங்களில் சம்பவங்களை சிருஷ்டித்திருக்கிறார்கள்.

இவ்வாறு இவை உருவாக்கப்பட்டிருப்பதால் கேட்பவருக்கோ படிப்பவருக்கோ விரசம் தட்டுவதில்லை. படிப்பவர்கள் சிந்திக்கவும் செம்மை நெறியில் நிற்கவும் அந்த இலக்கியங்கள் உதவின. நீதியும் தர்மமும், பொருளீட்டலும், கற்பு முறையும் அந்த இலக்கியங்கள் கூறி மனிதர்களை மனிதர்களாக வாழவைக்கப் பெரிதும் உதவின. அவற்றை எவரும் மறந்துவிடக்கூடாது.

கற்றுணர்ந்த பெரும் புலவர்கள் மனிதசமுதாயத்திற்கு வழிகாட்டுவதான நூல்கள் எழுதி, அதனைக் கற்றவர்கள் சபையில் அரங்கேற்றி அவர்கள் கேட்ட சந்தேகமெல்லாம் விளக்கித் தெளிவுபடுத்தி அவர்கள் சம்மதம் பெற்ற பின்னரே மக்களிடம் பரப்பினார்கள்.

இன்றைய இலக்கிய வாதிகள் உணர்வுப் பக்கம் செல்வதேயில்லை. இன்று யந்திர கதியில் உற்பத்தியாகும் இலக்கியங்கள் அனைத்தும் உணர்ச்சி வசப்பட்டவையே. இன்றைய சிறுகதைகள் மக்கள் பலருடைய மகத்தான ஆதரவை பெற்றிருப்பது உண்மைதான். இந்த ஆதரவை வைத்துக்கொண்டு விற்றுப் பிழைக்கலாமே தவிர கற்றுக்கொடுக்க முடியாது. இலக்கியமும் ஒரு போகப் பொருளாகவே போய்விடும். ஏனென்றால் ரசனை அத்தகையதாக இருக்கிறது.

இன்றைய சிறுகதைகளை உருவாக்கும் இளைஞர்கள் பிஞ்சிலே பழுத்து விடுகிறார்கள். இவர்கள் இத்தகைய கதைகளை சிருஷ்டிப்பதால் வீர்யம் இழந்து போகிறார்கள். நரம்புத்தளர்ச்சி அடைந்து விடுகிறார்கள். இன்ப உணர்ச்சியை எழுத்திலே தேக்குவதில் இவர்கள் ஆண்மை அழிந்து போகிறது.

சோனிக் குழந்தைகளுக்குத் தந்தையாக விளங்குகிறார்கள். இன்னும் சற்றுத் தெளிவாகக் கூறவேண்டுமானால் சிறுகதை ஆசிரியர்கள் பார்வைக்குப் பெண்களைப்போல தளுக்கும் குலுக்கும் உடையவர்களாக மாறிவிடுகிறார்கள். இதனைக் கவனித்துப் பார்த்தால் தெரியும்.

இந்தக்கதைகளைப் படிக்கும் முதியவர்களோ என்றோ ஒரு நாள் வாழ்வில் ஏற்பட்ட இன்ப நினைவை மீண்டும் ஞாபகப் படுத்திக்கொள்வதின் மூலம் இழந்த பலத்தை மீண்டும் பெற்று யௌவன புருஷர்களாக விளங்குகிறார்கள். இந்த முதியவர்கள் இளைஞர்களைவிட வலுவுள்ளவர்களாகவும் கஜபோக்கிரிகளாகவும் ஆகிவிடுகிறார்கள்.

இந்தக் கதைகளைப் படிக்கும் சிறு குழந்தைகள் பிஞ்சிலே வெம்பி விடுகிறார்கள். திருடர்கள் திருடிவிட்டால் எப்படித் தப்பித்துக் கொள்ளலாம் என்பதற்கும், கெட்டுப் போகிறவர்கள் எந்த விதம் கெட்டுப்போனால் பிழைக்கலாம் என்பதற்கும், இந்தக் கதைகள் பெரிதும் உதவுகின்றன. இன்றைய சமூகத்திற்கு வேண்டாத பல பண்புகள் சிறுகதை இலக்கியத்தால் விளைந்த பயன் என்று சொல்வதில் எனக்கு அச்சமில்லை. உண்மையைச் சொல்வதில் அச்சப்பட்டு ஆகுமா?

இவ்வாறுநான் கூறுவதைப் பலர் ஆட்சேபிக்கவும் கூடும். என்மீது சீறிச் சினம் கொள்ளவும் துணிவார்கள் அவர்களை நான் அமைதியாகக் கேட்கிறேன். தங்கள் குடும்பத்திலுள்ளவர்களிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லும் தைரியம் அவர்களுக்கு இருந்தால் அவர்கள் படித்துக் கெட்டுப் போக மாட்டார்கள் என்ற நம்பிக்கையிருந்தால் சரி, அதை நான் ஆட்சேபிக்கவில்லை.

இலக்கியம் நீண்டநாள் உயிருடன் வாழ்வது அதில் காணப்படும் ஒழுக்கத்தின் காரணமாகத்தான். இலக்கணம்கூட இரண்டாவது அம்சம்தான் என்று நான் மதிக்கிறேன். ஒழுக்கம் இல்லாவிட்டால் இலக்கியம் இல்லை, இலக்கியத்தின் உயிர்மூச்சாக இருப்பது ஒழுக்கம். அது வற்புறுத்தப்பட வேண்டும். இன்றைய சிறுகதை இலக்கியத்தில் வார்த்தைக்குப் பஞ்சமில்லை, வர்ணனைக்கும் பஞ்சமில்லை. கற்பனைக்கும் கதையின் அம்சத்திற்கும் பஞ்சமில்லை. ஒழுக்கம் ஒன்றுக்குத்தான் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது.

இவ்வாறு நான் கூறுவதைக் கேட்டு ஒழுக்கத்தைப்பற்றிக் கூற ஓராயிரம் நூல்கள் இருக்கின்றனவே ; ஒழுக்கம் ஒழுக்கம் என்று பேசி எல்லோரையும் ஆழ்வார்களாகவும் ஆண்டிகளாகவும் மாற்ற வேண்டுமா என்று கேட்பவர்கள் இல்லாமல் இல்லை.

ஒழுக்கம் கற்றவர்கள் அனைவரும் ஆழ்வார்களாகவும், ஆண்டிகளாகவும் போக வேண்டியதில்லை தான் என்றாலும், ஆடு மாடுகளாய் நாம் மாறிவிடவேண்டும் என்ற அவசியமுமில்லையல்லவா? மனிதர்களாக வாழவேண்டும் என்ற ஆசை படைத்த யாரும் ஒழுக்கத்தை விட்டு வாழவோ, பிரகாசிக்கவோ முடியாது.

[12ம் பக்கம் பார்க்க]

## அமுத வாக்கு

மானிடருக்குள்ளே இயற்கையால் ஏற்பட்டிருக்கும் வர்ண வேற்றுமைகள், உயர வேற்றுமைகள், சரீர பல வேற்றுமைகள் முதலியனவே மாற்ற முடியாதவை, செயற்கை உண்டாக்கிய கல்வி வேற்றுமைகள், செல்வ வேற்றுமைகள், ஜாதி பேதங்கள், முதலியன எளிதாக மாற்றிக்கொள்ளக்கூடியன.

—பாரதி




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே.

ஸூ 21 ] 19-8-56 [ வாரம் 37

# நமது ஜனாதிபதி

தமிழகத்தின் தலைநகரான சென்னையில்நம்முடன்சேர்ந்து சுதந்திரம் கொண்டாடிய நமது ஜனாதிபதிக்கு நமது வணக்கமும் வாழ்த்துக்களும் உரியன.

பரந்து கிடக்கின்ற பெரிய கண்டம் இந்தப் பாரத நாடு. புதிய வாழ்வுக்குப் பாரத அரசாங்கத்தார் மேற்கொள்ளும் திட்டங்கள் அனைத்திலும் எந்தச் சிறிய பிரதேசமும் புறக்கணிக்கப்பட மாட்டாது என்ற நல்லெண்ணத்தை மிக உருக்கமாகவும் உதாரணங்களுடனும் ஜனாதிபதி விளக்கியிருக்கிறார்.

''தேசபடத்தில் தமிழகம், பாரதத்தின் பாதங்களைப் போல் விளங்குகிறது. மேலே கனத்திருக்கும் உடலனைத்தின் சுமையை தாங்குவதும், அந்த உடலுக்கு இயக்கத்தைக் கொடுப்பதும் பாதங்களே என்ற உண்மையை மறக்கக் கூடாது''

தென்னாடு தனது ஸ்தானம் இன்னதென்று புரிந்து கொள்ளவும், அதை வடக்கேயிருப்பவர்கள் மதித்தே ஆக வேண்டுமென்பதற்கும் இந்த அருமையான உதாரணம் பயன்படும்.

''கோயிலில் தரிசனத்திற்குச் செல்லும் கோடானு கோடி ஜனத்திரளில் எல்லோரும் ஏக காலத்தில் தரிசனம் செய்ய இயலுவதில்லை. ஒருவர்பின் ஒருவராகச் சென்றால் எல்லோருக்கும் தரிசனம் கிடைக்கும். நதியில் நீராடச் செல்லும் போதும் இப்படித்தான். படிக்கட்டில் இடம்இருக்கும் வரையில் தான் கோஷ்டி கோஷ்டியாக ஜனங்கள் இறங்கலாம். எப்படியும் கடைசி வரையில் எல்லோரும் நீராடச் சந்தர்ப்பம் உண்டு''

ஐந்தாண்டுத் திட்டம் போன்றவற்றில் எல்லா பிரதேசங்களும் ஒவ்வொன்றாக முழுமையும் கவனிக்கப்பட்டே தீரும் என்பதை விளக்குவதற்காக இப்படிக் கூறியிருக்கிறார் ஜனாதிபதி.

அவருடைய வயது, பதவி, உள்ளம், இவற்றையெல்லாம் தெளிவாகக் காட்டுகின்ற அவரது அன்பு நிறைந்த வாசகங்களை வணக்கத்துடனும் நம்பிக்கையுடனும் நாம் கேட்டுக் கொள்வோம். பாரத நாட்டின் ஒற்றுமை குலையாத பிரதேச நலனையும் வளர்ப்போம்.

விடுதலைப் போராட்டம்

# திருச்சியின் பங்கு

—(ரா. நா.)—

முதல் ஒத்துழையாமை இயக்கம் தொடங்கி பல தேச பக்தர்கள் சிறை சென்று திரும்பி வந்ததும் நாடே அயர்வுற்றிருந்தது. இந்தத் தேக்கங்களுக்குத் திருச்சியும் தப்பவில்லை. உறங்கியிருந்த மக்களைத் தட்டி யெழுப்பிய திருப்பணியில் தமிழ்நாடு தேசபக்த சமாஜத்தாரின் பங்கை இங்கு குறிப்பிட வேண்டும். இந்த சமாஜத்தார் சாது சுப்பிரமணிய சிவத்தினிடம் ஆதர்சம் பெற்று நன்றாகக் கூடினர், பாரதியாரின் தேசிய கீதங்களை முழங்கி மக்களுக்கு உணர்ச்சி ஏற்படுவதையே தங்களது சிறப்பான பணியாகக் கொண்டிருந்தனர், இந்த சமாஜத்தில் மதுரை வாழ் தேச பக்தர்கள் பலர் பங்கு கொண்டிருந்தாலும் நண்பர் ரா. ஸ்ரீனிவாஸவரதனும் அவரது தர்ம பத்தினியார் வீராங்கனை காலஞ்சென்ற ஸ்ரீமதி பத்மாஸனி அம்மாளவர்களும் தங்களதுபூராகாலத்தையும்தேச பணியில் கழித்தனர். இவர்கள் ஊர் ஊராகச் சென்று பாரதி பாட்டுகளைப்பாடிக் கொண்டு தெருக்களிலே மக்கள் உவந்தளிக்கும் தானியங்களை வாங்கி சமைத்துச் சாப்பிட்டு மகிழ்ச்சியுடன் தங்கள் பணியை ஆற்றினர்.

1923ம் ஆண்டு ஆகஸ்டில் இவர்கள் திண்டுக்கல் வந்திருப்பதை அறிந்து திருச்சி காங்கிரஸ் ஸ்தாபனத்தினர் இவர்களைத் திருச்சிக்கு அழைப்பித்தனர், திருச்சி முனிசிபல் சத்திரத்தில் தங்கி தெருக்களில் பாடிக்கொண்டு செல்லுகையில் அதுவரையில் பாராமுகமாகமாயிருந்த நகரவாசிகள் இவர்களுடைய தேசிய கீதப் பேரொலியைக் கேட்டு இவர்களை உபசரித்து அன்று மாலை நடந்த பொதுக்கூட்டத்திற்கும் திரளாக வந்திருந்தனர். அன்று கூட்டத்திற்கு தலைமை தாங்கிய டாக்டர் ராஜன் மூக்கில் விரல் வைத்து இவர்களது திறத்தையும் ஆவேசத்தையும் நிலையான பணியையும் பாராட்டினர்.

இவர்களை நான் கரூருக்கு அழைத்துச் சென்றேன். முதல் ஒத்துழையாமை இயக்கத்தில் மதுவிலக்குச் செய்வதற்காக இந்த வட்டாரத்திலுள்ள உற்சாகிகள் கண்ணுக்குத் தெரிந்தமட்டில் இருந்த தென்னைமரத்திலுள்ள பாளைகளையெல்லாம் சீவி எறிந்ததால் ஆட்சியினர் ஆத்திரங் கொண்டு பழிவாங்கக் காத்திருந்தனர். சந்தர்ப்பமும் கூடி வந்தது. கரூரில் வேல் நாயர் கம்பெனியார் நாடகமாடி வந்தனர், தேசிய ஆர்வமுள்ள மக்கள் தேசியப்பாடல்கள் பாடும்படி கோரினர், சபையில் போலீஸ் அதிகாரிகள் இருந்ததால் நாயர் பாட மறுத்தார். கொட்டகையில் கலகம் ஏற்பட்டது. போலீசார் துப்பாக்கி சத்தம் செய்து கூட்டத்தைக் கலைக்க முயன்றதுடன் ஸ்தல காங்கிரஸ் தலைவர்களைக் கைது செய்துசிறை தண்டனை பெறச் செய்தனர். இதற்குப் பிறகு கரூர் பெட்டிப் பாம்பாய் இருந்தது தேச பக்தர் அங்கு சென்றார். சீந்துவாரில்லை இந்த நிலையில்தான் சமாஜத்தார் அங்கு சென்றனர். யாரும் அவர்களை உபசரிக்க முன் வராததால் அமராவதி நதிக்கரையில் தங்கினோம் சமாஜ கோஷ்டியினர் தெருக்களிலும் குறிப்பாக போலீஸ் நிலையத்தின் முன்பும் பாரதியாரின் அச்சமில்லை அச்சமில்லை எனும் பாட்டை வானம் அதிரப் பாடினர். உள்ளே இருந்து இதைக் கேட்ட மக்கள் அதன் வீர முழக்கத்தில் ஈடுபட்டு மெல்ல வெளியே வந்தனர். இஸ்லாமியர் வாழும் தெருக்களில் கவியரசரின் 'அல்லா', பாட்டைப் பாடவும் முஸ்லீம் நண்பர்களும் குழுமினர். அன்று மாலையில் அமராவதி நதி மணலில் 10 000 மக்கள் கூடி விட்டனர், ஈரோட்டிலிருந்து அச்சமயம் காங்கிரஸ் தலைமை தாங்கிய ஈ. வே. ரா, கமிட்டிக்குத் தலைமைவகித்து சமாஜத்தாரின் நற்பணியைப் பாராட்டினார். இவர்கள் கரூர் வந்திருந்ததை அறிந்த நாமக்கல் கவிஞர் இதற்காக கரூர் வந்து சமாஜத்தாரைச் சந்தித்துஅவர்களைப் பாராட்டி அவர்கள் பிரசாரத்திற்காகப் பிரத்தியேகமாக ஒரு பாட்டையும் புனைந்து உதவினார்.

தமிழ் நாட்டின் சுதந்திரப் போராட்டத்திலேயே தேச பக்த சமாஜத்தார் செய்த திருப்பணிக்குச் சிறந்த இடமுண்டு என்றால்மிகையாகாது

—

## நெஞ்சின் அலைகள்

'நாடகம்'

திருச்சி ரயில்வே இன்ஸ்டிடியூட், கலைக் குழுவினர் 11—6—56வ சனிக்கிழமையன்று மாலை 7-மணிக்கு, திருச்சிக்கோட்டை ரயில்வே இன்ஸ்டிடியூட்டில் திரு. அகிலன் அவர்களின் பிரசித்திபெற்ற நாவலான "நெஞ்சின் அலைகள்" என்ற நவீனத்தை நாடகமாக்கி நடித்தார்கள், நவீனத்தை நாடகமாக அமைத்தவர் அன்பர் ரா. நீலமேகம் அவர்களாகும்.

நாடகத்திற்கு சிவாஜி ஆசிரியர் திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமை வகித்தார். திரு. அகிலன் அவர்களின் முன்னிலையில் இந்த நாடகம் நடத்தப்பட்டது.

தலைமை வகித்த திரு. ரெட்டியார் பேசும்போது, அரசியல் வாதியின் நெஞ்சலைகளுக்கும், விஞ்ஞானியின் நெஞ்சலைகளுக்கும், சாதாரண மனிதன் ஒருவன் நெஞ்சலைகளுக்கும், கலைஞன் நெஞ்சலைகளுக்கும், உள்ள தாரதம்மியத்தை எடுத்துக்காட்டி கலைஞனின் நெஞ்சலை யாரையும் துன்பப்படுத்துவதில்லை என்றும், அதே சமயம் ஒரு நெடிய வாழ்வில் மனிதன் கற்றுப் பெறவேண்டிய பெரிய அனுபவத்தை ஒரு நொடி நேரத்தில் உணரவைக்கும் திறமை நாடகத்தின் மூலம் கலைஞன் செய்து முடித்து விடுகின்ற அதிசயம் அற்புதமென்று கூறி, நாடக ஆசிரியர் ரா. நீலமேகத்தையும், நடிகர்களையும் பாராட்டிப் பேசினார்.

அடுத்துப் பேசிய திரு சுகி அவர்கள் திரு. நீலமேகம் அவர்கள் மிகவும் சிறப்பாக, விறுவிறுப்பான முறையில் நாடகத்தை உருவாக்கியிருப்பதை எடுத்துக்காட்டி சிலாகித்துப் பேசினார்.

பேராசிரியர் சி. எஸ். கமலபதி எம். ஏ. அவர்கள் பேசுகையில் நாடக ஆசிரியர் கையாண்டிருக்கும் உத்திகளையும் நாடகத்தை பார்த்து ரசிப்பவர்கள் கைக்கொள்ள வேண்டிய விதிகளையும் வலியுறுத்திப் பேசினார்.

திரு அகிலன் அவர்கள் பேசுகையில் இந்த நவீனம் சினிமாவில் நடிப்பதற்கென்று உருவாக்கப் பட்டிருப்பதாகவும், சில காட்சிகள் சினிமாவில் வரும்போது அபாரமாக இருக்கும் என்று தெரிவித்துவிட்டு, நாடக ஆசிரியரையும், நடிகர்களையும் பாராட்டிப் பேசியிருக்கிறார்.

நாடகாசிரியர் ரா. நீலமேகம் பேசுகையில் தமக்கு அனுமதியளித்த அகிலனைப் பாராட்டினார். நாடக அமைப்புக்கென்று சில புதிய பாத்திரங்களைசிருஷ்டித்திருப்பதாகவும், அதனை பார்த்து மகிழ்ந்து மாறுதலை ஏற்றுக்கொண்ட ஆசிரியர் அகிலனைப் பாராட்டினார்.

நடிகர் இக்னேஷியஸ்ராஜா நன்றி நவின்றார். நாடகம் அமக்களமாக, அபாரமாக முடிவு பெற்றது.

—

திருச்சி டி. மு. கோர்ட்

S. C. No 677/56

S S. நாராயணசாமி பிள்ளை —வாதி

அழகிரிசாமி நாயுடு S/o புதுப்பட்டி வெங்கிடசாமி நாயுடு சாத்தமங்கலம் —பிரதிவாதி

ஷை வாதி பிரதிவாதி பேரில் புரோ நோட்டின் பேரில் ரூ 204—0—0 யும் பின் வட்டியும் செலவும் கிடைக்க போட்டிருக்கும் ஷை தாவா 25—8—56-ல் வாய்தாபோட்டிருப்பதால் அன்று பிரதிவாதி கோர்ட்டில் காலை 11 மணிக்கு ஆஜராகாவிட்டால் எக்ஸ் பார்ட்டி தீர்ப்பு ஏற்பட்டுவிடும்.

C. ராமனாதன்
வாதி அட்வகேட்,



திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 172/56

தாமஸ்மேரி அம்மாள் —வாதி

தையலு அம்மாள் W/o முத்துசாமி துவாகுடி —பிரதிவாதி

ஷை வாதி பிரதிவாதி பேரில் ரூ 140—0—0 ம் பின் வட்டி செலவு புரோ நோட்டின் பேரில் கிடைக்க போட்டிருக்கும் தாவா 25—8—56ல் வாய்தா போடப்பட்டிருப்பதால் அன்று கோர்ட்டில் காலை 11 மணிக்கு ஆஜராகாவிட்டால் எக்ஸ் பார்ட்டி தீர்ப்பு ஏற்பட்டுவிடும்.

C. ராமனாதன்
வாதி வக்கீல்

# ராம தகனம்

கே. ஆர். பசுபதி

1

பனிபடிந்த மலர்போல, சீதை வருகிறாள். ரகுராமனைச் சந்திக்கப் போகிறோமென்ற பூரிப்பு அவள் முகத்தில் பொங்கி வழிகின்றது, வெட்கமும், வேதனையும் முகமண்டலத்தில் மாறிமாறித்தோன்ற மயிலென நடந்து வருகிறாள் வைதேகி! ராமனுடைய கண்ணோரங்களில் சினத்தால் சிவப்பு தேங்கி நிற்கின்றது.

**ராமன்**

லட்சுமணா! மாற்றானுடைய மலர்த் தோட்டத்திலே அசோக வனத்தின் நிழலருமையிலே பல மாதங்களை ஓட விட்ட ராஜகுமாரி வருகிறாள்! தன்னுடைய சிவந்த பாதங்களை இலங்காபுரியின் பிரகாசிக்கும் புல்தரையிலே நோகாமல் நடைபோட்டவள் வருகிறாள்! மிதிலையின் குலக்கொடி குற்றமற்றவளென்பதை இதோ, இங்கு வெள்ளமெனத் திரண்டிருக்கும் ஜனங்களின் முன்னால் நிரூபிக்க வேண்டும்! அதோ பார்! அன்று முப்புரத்தை, நேற்று இலங்கையை சுவைத்தும் பசியடங்காமல் துடிக்கும் நாக்குடன் சுழலும் அக்கினிதேவனை! அந்த அக்கினி குண்டத்திலே சீதை இறங்க வேண்டும்! அவளை, கற்பின் பெட்டகமென்று பொற்பின் நிலைக்களளென்று அக்கினி அத்தாட்சி கூறவேண்டும்.

(சுற்றி நிற்போர் அனியாயம், அக்கிரமம் என்று முணுமுணுக்கின்றனர்)

**ஆஞ்சநேயர்**

(மோனத்தைக் கலைத்து அன்னைக்கா அக்கினிப்பரீட்சை? ஏன்? எதற்காக? வேண்டாம் இந்த ஆவேசம்! அகிலம் கூறுகின்றது உம்மை அனாதரட்சகனென்று! சரணமென்போரின் துயர் நீக்கும்தூயோனென்று. குயிலென அழுது, முத்தெனக் கண்ணீரை ஓடவிட்டுக் கொடிபோல நிற்கும் சத்திய சொரூபத்தைப் பாருங்கள்! 'ராமா' என்ற சொல்லால் விண்ணையும், மண்ணையுமளக்கும் விசுவரூபமெடுத்தேன்! வான்வெளியில் நீந்தினேன்! கடல் கடந்தேன்! இடையூறுகளை உடைத்தேன்! நுழைய முடியாத இலங்கையிலே நுழைந்தேன். இணையற்ற வீரர்களின் ரத்தக் குளத்திலே நீந்தினேன் அட்சகுமாரனைத் தேய்த்தேன் அழுகுரலையும் ஆராத் துயரத்தையும் பார்த்தறியாத இலங்கையிலே மூலைமுடுக்கெல்லாம் ஓலம் ஓசையிட்டது! அவலம் அலைபாய்ந்தது! வாலில் பற்றிய தீயெனக்குப் பனியானது. இலங்கையின் வண்ணமாளிகையிலே, தங்க உப்பரிகையிலே வைத்தேன்! அத்தனையும் ஆறாக உருக ஓடின ,

ஆம்! இத்தனையும் தித்திக்கும் உமது திருப்பெயர் தந்த ஆற்றல்!

**ரா**:—(இடைமறித்து) அதனால் என்ன?

**ஆஞ்**:— தொடர்ந்து பேசுகிறார்) அதனால்தான் பேசுகிறேன், ஜனகன் மகள் மணம் வீசும் முல்லை! ஒப்பற்ற ஒளித்திரள்! கிள்ளாத பசுந்தளிர்! உம்மையே தனது நெஞ்சில் நீங்காத அமுதப்படமாக எழுதிக் கண்ணுறங்காமல் காத்து நிற்பவள், தவத்தின் திரு வுருவம்! சக்திக்கனல்! அன்பூறும் அமுதவாய்! எனது தாய்! அவளுக்கா அக்கினிப் பரீட்சை? உமது திரு நாமத்தினால் அரும் பெருஞ்சாதனைகளைப் புரியும் பேராற்றல் பெற்றேன்! ஆனால், உம்மையே கணவனாகப் பெற்ற புனிதவதிக்கு, துன்பசாதனை. விந்தையிலும் விந்தை! கோசலையின் மருமகள் இழைத்த குற்றமென்ன? கோமகனே கூறும். பூமி மேலும் பொறுக்காது,

**ரா**!— வாயுகுமார! வாய்ச்சிலம்பமாடிப் பயனில்லை! எனது முடிவு தீட்டப்பட்ட கத்தி போல கூர்மையானது! மாற்ற முடியாதது! ஜனகன் மகள் தீயில் பாய்ந்தேயாக வேண்டும் இது தசரதன் மைந்தன் கட்டளை!

(சகலரும் சிலையாக நிற்கின்றனர்)

2

(நடக்கப்போவதைக்காண முப்பத்தி முக்கோடி தேவரும் வான வெளியிலே கூடியுள்ளனர். இந்திரனும் தசரதனும் வந்துள்ளனர்)

**தசரதன்**;— இந்திரா! இங்கே அநீதி ஆர்ப்பரிக்கின்றது. கொடுமைகொக்கரிக்கின்றது, சர்வாதிகாரம் சதிராடுகின்றது! தசரதன் மைந்தன் கட்டளையென்று எனது பெயருக்குக் களங்கமுண்டுபண்ணிவிட்டான் ராமன்! இவனுடைய மூர்க்கத்தனத்துக்கு முடிவு கட்டப் போகிறேன், சீதையை அக்கினிப் பிரவேசம் செய்யாமல் தடுப்பேன். (சினத்துடன் புறப்படும் தசரதனை இந்திரன் தடுத்து நிறுத்திப் பேசுகிறான்)

**இந்**;— தசரத மன்னா! பொறுத்திருந்து பாரும்! கோபக்கணைகளை அள்ளி வீசி, வேதனைத்தீயில்வெந்து வாடாதீர்! துன்பத்தால் துவண்டது போதும். அகல்யையைக் காத்து அன்னையென வழிபட்ட ராமனால் சீதைக்கு என்ன நேர்ந்துவிடும்! அவள் கற்பெனும் பெருந்தீ! அக்கினியின் பூஜைக்குரியவள்,

இதற்குள் சீதை ராமனை வணங்கித் தீயில் இறங்கிவிட்டாள். அன்னையே யென அக்கினிவரவேற்றான். ஜோதி மலை. மலர்க்குன்றமென சிதைகாட்சியளித்தது! விண்ணும் மண்ணும்தசரதனும் இன்பக் கடலில் நீந்தினர். பன்னீர் மலர்கள் மணந்து வீசின)

3

[அயோத்தி அரண்மனையில் தனியறை. ராமன் சிந்தனையில் ஆழ்ந்து அமர்ந்துள்ளார். லட்சுமணன் நுழைகிறான்]

**ராமன்**:—(சிந்தனை கலைந்து) லட்சுமணா! நாட்டின் நிலையென்ன? குடிமக்கள் வாழ்விலே குறையேதுமில்லையே? நமது ஆட்சியைப்பற்றி மக்கள் கருத்தென்ன? நம்மைப் பற்றி மக்கள் கருத்தென்ன? நம்மைப்பற்றி என்ன பேசுகின்றனர்? (லட்சுமணன்முகத்திலே தயக்கமும், கவலையும் சூழ்வதைக்கவனித்து) தயங்காமல், எதையும் மறைக்காமல் கூறு.

**லட்** !— வேந்தே! வருத்தம் வட்டமிடுகின்றது, தன் மனைவியைச் சினந்து வண்ணான் ஒருவன் பேசினான். அன்னியன் வீட்டில் வசித்த சீதையை சேர்த்துக் கொண்ட ராமனல்ல நான்! என்று ஆத்திர முழக்கமிட்டான்.

**ரா** !— (பெருமூச்சும் கோபமும் கொந்தளிக்கிறது.)

ஆம்! இன்று வண்ணான் பேசுகிறான், நாளை வையகம் பேசும். பொதுமக்கள் கருத்து பூகம்பத்தை விடக் கொடியது. நாடாளும் மன்னர் மதியாது நடந்தால் நாசமாக்கும் நெருப்பு. நெளிந்தாடும் நாக சர்ப்பம். லட்சுமணா உடனே சீதையைக் கானகத்தில் விட்டு விடு ரதம் தயாராகட்டும்:

**லட்** :— தயாராகப் போகிறாள் வைதேகி. பூர்ண கர்ப்பிணியைப் புலி வாழும் காட்டில் விடுவதா? வேந்தே! சிந்தியுங்கள் முடிவை மாற்றுங்கள்.

[ராமர் சினந்து நோக்கவே, லட்சுமணன் சீதையை உத்திரவுப்படிக்காட்டில்விடுகிறான். சீதை தனது வயிறு பற்றியெறிவதை உணர்த்தும் முறையில் தொட்டுக் காட்டுகிறாள் கண்ணீர் மல்க இளவல் திரும்புகிறான்]

4

[தசரத மன்னன் கோபம் கொப்புளிக்க அரூபமாக ராமன் முன் தோன்றிப் பேசுகிறான்]

**தச** :— ராமா! நீதியை நிலைகுலையச் செய்து விட்டாய் அன்று. அரக்கருக்கு மத்தியில் சுடு சொல்லால் துளைத்துச் செந்தீயில் பாயச் சொன்னாய் மனிதப்பண்பற்று நடந்தாய். பொங்கி எழுந்தேன் தீமையைத் தேய்க்க. இந்திரன் குறுக்கிட்டான்; பொறுத்தேன். இன்று மீண்டும் கொடுமைக்கு மாலையிட்டு கடும்புலிக் காட்டிலே கனக மணிச் சீதையைத் தவிக்கச் செய்கிறாய்! மக்கள் கருத்தென்று கதைபேசிக் கண்ணீர்க் குளத்திலே மருமகளை மிதக்க விட்டாய்! வண்ணா

[12-ம் பக்கம் பார்க்]

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

தொகுதிகளிருப்பதை உணர்ந்து பிரதேச பாஷைகளின் வளர்ச்சிக்கு சாத்தியமான சகல உதவிகளையும் செய்துதான் வருகிறோம்; ஆனால் இந்த பாஷைத் தொகுதிகள் ஒரு மொத்த பிண்டத்தின் கூறுகள்தான் என்பதை நாம் மறப்பதற்கில்லை. ஒரு ஜனநாயக சமுதாயத்தின் அங்கங்களாக இருக்கும் பல்வேறு பிரிவுகளிடையே தாராளமான தொடர்பு எந்த அளவுக்கு இருக்கிறதோ அதைப் பொறுத்துத்தான் அந்த சமூகத்தின் பலமும் அமைகிறது. ஜனநாயகம் கலாசாரம் அபிவிருத்தியடைவதற்குக் கட்டுப் பாடற்ற தாராளமான சமூகத் தொடர்பு இருப்பது மிகவும் அவசியம். பல்வேறு பாஷைத் தொகுதிகளும் ஒன்றோடொன்று தொடர்பில்லாத முறையில் துண்டித்து வாழ முடியாது. வடக்கு, தெற்கு, கிழக்கு. மேற்கு ஆகிய சகல பகுதிகளிலும் உள்ள மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு பொது.பாஷை அந்த சமூகத்திற்கு வேண்டும்

பல்வேறு பாஷைப்பிரதேச மக்களுக்கிடையே பரஸ்பரத் தொடர்பு வைத்துவருவதற்கு ஆங்கிலத்தைப் பாஷையாக வைத்துக்கொள்வது இயலாதென்பது வெளிப்படை. சொற்ப எண்ணிக்கையுள்ள அதிகாரவர்க்கமும், குறிப்பிட்ட சிலரிடையே மாத்திரம் பரவியிருக்கிற கலாசாரமும் உள்ள சூழ்நிலையில் ஆட்சி செலுத்தும் சர்க்காருக்கு அது போதுமானதாக இருக்கலாம். ஆனால் ஒரு ஜனநாயக சமூகத்தில், மக்கள் சர்க்கார் விவகாரங்களில் வரவர அதிக அளவுக்குப் பங்கெடுக்க வேண்டும்; நல்ல முறையில் கலாசாரம் உருவாகும்படி செய்வதிலும் அவர்கள் பங்கெடுக்க வேண்டும். ஹிந்தியை இந்தியாவிலுள்ள எல்லாச் சிறுவர்களுக்கும் போதிக்கவேண்டுமென்ற ஒரு முடிவிலிருந்து நாம் தப்புவதற்கு வழியில்லை. அது தேசீய ஐக்கியத்தை ஒன்றுசேர்த்து வைக்கிற பசையாக இருக்கும். நமது கலாசாரத்தை மீண்டும் ஒருமுகப்படுத்துவதற்கு அது உதவியாக இருக்கும்.

**ஆங்கிலத்தின் ஸ்தானம்**

ஆங்கிலத்தைப் பொறுத்த மட்டில் அது நம்நாட்டை ஆண்ட அந்நிய சர்க்காரின் பாஷையாக இருந்தபடியால் அதற்கு முன்காலத்தில் எதிர்ப்பு இருந்தது. இந்தியத் தேசீய உணர்ச்சி தன் செல்வாக்கை நிலைநாட்டிக்கொள்ள தலை தூக்கியகாலத்தில், அத்தகைய ஒரு எதிர்ப்புக் கிளர்ச்சி இருந்தது இயற்கைதான், அப்போதும்கூட, பல தேசீயத் தலைவர்கள் நமது கல்வி முறைக்கு ஆங்கிலம் எவ்வளவு முக்கிய தேவையென்பதை உணர்ந்துதான் இருந்தார்கள்.

சுதந்திரத்துக்குப் பிறகு' நாம் இது விஷயத்தில் சற்று விருப்பு வெறுப்புக் குறைந்த முறையில், யதார்த்த ரீதியில் முடிவு கட்டலாம். செகண்டரிப் பள்ளிக்கூடங்களில் ஆங்கிலத்தை நீடித்து வைத்திருப்பதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன: (1) ஆங்கிலம் இப்போது எந்த ஒரு தேசத்தின் பாஷையாக மாத்திரம் இல்லை; அது ஒரு சர்வதேச பாஷையாக ஆகிவருகிறது. இந்தியா சர்வதேச விவகாரங்களில் ஒருமுக்கியமான பங்கை மேற்கொள்ளவிருக்கிறது; அதன் பரம்பரைப் பெருமையும், கலாச்சார மரபும் அதற்கு அந்தப் பொறுப்பைத் தந்திருக்கின்றன. ஆங்கில பாஷைமூலம்தான் நாம் ஒரு உலக சமுதாயம் உருவாவதற்கும், நாகரிக வளர்ச்சிக் கும் வழிசெய்ய முடியும். (2) ஆங்கிலம் விஞ்ஞான தொழில்நுட்பத் துறை பாஷையாகவும் இருக்கிறது. இந்தியா விஞ்ஞானத்தையும், தொழில்நுட்பத்தையும் அதன் தேசீய முற்போக்குக்குப் பயன்படுத்தி மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு உபயோகித்துவர முடிவுசெய்துவிட்டது. ஹிந்தியிலோ இதர இந்திய பாஷைகளிலோ விஞ்ஞானத் துறையின் மூல கிரந்தங்கள் மிகச் சொற்பமாகவே இருக்கின்றன. நமது மாணவர்கள் விஞ்ஞானத் துறையில் மூல நூல்களை நேரில் பரிச்சயப்பட்டுத் தெரிந்துகொள்வதற்கு ஆங்கில பாஷையைச் சரியானபடி அறிந்துகொள்வது அவசியமாகும்.

ஒரு மாணவன் உயர்தரக் கல்லூரியைவிட்டு வெளியேறும்போது அவனுக்கு பிரதேச பாஷை, ஹிந்தி, ஆங்கிலம் ஆகிய மூன்று பாஷைகள் தெரிந்திருக்க வேண்டும். ஹிந்தியைத் தாய்மொழியாக கொண்டவர்கள் மற்றொரு இந்திய பாஷையைக் கற்க வேண்டும். இந்த ஏற்பாட்டின் மூலம் ஹிந்திபேசாத பிரதேசங்களுக்கும் ஒரு சமநிலை ஏற்படும். இதர பாடங்களோடுகூட, மூன்று பாஷைகளையும் ஒரு குழந்தை படிப்பது சிரமமாக இருக்குமென்று சிலர் அஞ்சுகிறார்கள். இந்த அச்சம் ஆதாரமற்றது; எத்தனையோ நாடுகளில் செகண்டரிக் கட்டத்தில் பிள்ளைகள் மூன்று பாஷைகளைப் படிக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் படித்தும் வருகிறார்கள். அது எப்படியாயினுமசரி, கலாசார சுதந்திரம், தேச ஐக்கியம், சர்வதேச நல்லுணர்வு ஆகியவைகளை லட்சியங்களாகக் கொண்ட நம்மைப் போன்ற ஒரு சமுதாயத்தில் மூன்று பாஷைகள் படிப்பது அவசியமாகும்.

**மத்திய– ராஜ்ய சர்க்கார்கள் ஒருமுகப்பட்ட நடவடிக்கை**

நமது சமுதாயத்தில் நாம் பெரிய லட்சியங்களாகக் கொள்ளவிருக்கும் கொள்கைகளையும், விஷயங்களையும் பிரதிபலிக்கக்கூடிய ஒரு தேசீய கல்வி முறையை உருவாக்குவதற்கு மத்திய, ராஜ்ய சர்க்கார்களிடையே இன்னும் அதிக அளவுக்கு ஒருமுகப்பட்ட நடவடிக்கை அமைப்பு ஏற்படும்படி செய்வது மற்றொரு கஷ்டமான, அவசரப் பிரச்னையாகும். அரசியலமைப்புத் திட்டத்தில் கண்டுள்ளபடி ராஜ்யங்கள் கல்வித் துறையில் தங்கள் சுயேச்சாதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாமாயினும், பொதுவான தேசீயக் கல்விக் கொள்கைகளையும், திட்டங்களையும் உருவாக்குவதற்கு மத்திய, ராஜ்யசர்க்கார்கள் சகல முயற்சிகளையும் செய்து வருவது அவசியம்.

இதற்காக மத்திய சர்க்கார் பல்வேறு ஸ்தாபனங்களை ஏற்படுத்தியுள்ளனர். மத்திய கல்வி ஆலோசனை போர்ட், சர்வகலாசாலை மானியக் கமிஷன்; அகில இந்திய தொழில் நுட்பக் கல்விக் கவுன்சில், அகில இந்திய செகண்டரிக் கல்விக் கவுன்சில். தேசீய கிராமாந்தரக் கல்விக் கவுன்சில் முதலியவை அத்தகைய முக்கிய ஸ்தாபனங்களாகும்; அகில இந்திய ஆதாரக் கல்விக் கவுன்சில் ஒன்றையும் அமைப்பதுபற்றி சர்க்கார் ஏற்கனவே யோசித்து வருகிறார்கள்.




இந்தப் போர்டுகள், கவுன்சில்கள் முதலியவை திறம்பட வேலைசெய்து தேவையான கல்விச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமானால், மத்திய, ராஜ்ய சர்க்கார்களிடையே உச்சப்பட்ச கூட்டுறவும், நல்லுணர்வும், இருக்கவேண்டும். தனிப்பட்ட ராஜ்ய சர்க்காரும், மத்திய சரக்காரும் ஒன்றுபோல இயங்கவில்லையானால் தேசீய ஐக்கியம் பலவீனமடையும்.

தேசீய மனப்பான்மையும், ஐக்கியத்தையும் உருவாக்குவதற்குக் கல்வி வலுவான ஆயுதமாக இருந்து வந்திருக்கிறது. மத்திய சர்க்கார் கல்வித் திட்டங்களுக்காக வரவர அதிக அளவுக்கு நிதிப் பொறுப்பேற்றால் அதை ராஜ்ய அதிகார விவகாரங்களில் குறுக்கிடுவதாகக் கருதக்கூடாது; யூனியனின் அங்கங்களாக உள்ள பகுதிகள் ஒன்றை ஒன்று நம்பியிருக்க வேண்டியவை என்றுதான் கருத வேண்டும். கிராம-நகர, முற்போக்கு-பிற்போக்குப் பிரதேசங்கள், சமூகங்கள் ஆகியவை இடையேயுள்ள கல்வித்தர ஏற்றத்தாழ்வுகளை நிவர்த்திப்பது நம் தேசீயப் பிரச்னை. அதற்கு மத்திய உதவியும் ஆலோசனையும் அவசியம், அவை கிடைத்தால் வரவேற்க வேண்டும்.

மத்தியில் அதிகாரத்தைக் குவிப்பது, அங்கங்களிடம் அதிகாரத்தைப் பரவலாக விநியோகிப்பது ஆகிய முரண்பட்ட இருபோக்குக்கும் இடையே ஒரு சமநிலையைக் கண்டுபிடிக்கவேண்டும். சகிப்புத் தன்மை, விவேகம், நல்லுணர்வு ஆகியவைகளைக் கைக்கொண்டு அந்த சமநிலையைக் கண்டுபிடிக்க வேண்டும்; அது ஒரு சிரமமான பணி.

———

(3ம் பக்கத் தொடர்ச்சி)

ஒன்றை அந்நிபுணர் கமிட்டி வகுத்துக் கொடுக்கும்,

**வளர்ச்சிப் பாதையில்**

இதுபோலவே, பல்வேறு ரக அச்சு யந்திர சாதனங்கள் சம்பந்தமாகவும் அந்த அபிவிருத்திப்பிரிவு ஒரு சர்வே வேலையை மேற்கொண்டிருக்கிறது, தேசீய தொழில்துறை அபிவிருத்திக் கார்ப்பரேஷன் வகுத்து வருகிற திட்டங்களில் அச்சு யந்திரத் தயாரிப்பும் ஒன்ருகும். நாட்டில் ஒரே சீரான தொழிலபிவிருத்தியை ஏற்படுத்துவதற்காக சர்க்காரால் அமைக்கப்பட்டுள்ளதும் சர்க்காருக்குச் சொந்தமுள்ளதுமான மேற்படிக் கார்ப்பரேஷனின் பல திட்டங்களில் யந்திர சாதனங்கள் தயாரிப்பதற்கான முக்கியமான சில திட்டங்களும் உள்ளன,

நாட்டில் கனரகத் தொழில்களில் அபிவிருத்தியைக் கருத்தில் கொண்டு பார்க்கும்போது, அத்திட்டங்களிலெல்லாம் மிகவும் முக்கியமானவை உருக்கு பௌண்டிரிகள். போர்ஜுகள் (கொல்லுலைப் பட்டரைகள்) உருக்குக் கட்டுமானப் பட்டரைகள் ஆகியவைகளை நிர்மாணிப்பதற்கான திட்டங்களும், கனரக யந்திர சாதனத் தயாரிப்புத் திட்டமுமாகும்.

சாமானிய மனிதனுக்கு பௌண்டிரிகள், போர்ஜுஸ் கட்டுமானங்கள் போன்ற வார்த்தைகளின் அர்த்தம் என்ன என்றே தெரியாது. வாஸ்தவத்தில், அவைகள் இரும்பு அல்லது உருக்கு அவ்வாறு உருக்கொடுக்கப்பட்டு: சிக்கலான ஒரு யந்திரம் அல்லது யந்திர சாதன உறுப்பு அல்லது பாகமாக ஆக்கப்படுகிறது என்பதை விவரிக்கும் சொற்களேயாகும். யந்திரங்களில் சில பாகங்கள் வார்ப்பு ரூபத்தில் உள்ளன. சில பாகங்கள் சம்மட்டியால் அடித்து (போர்ஜிங்) உருக்கொடுக்கப்பட்டவையாகும். சில கட்டுமான அமைப்புள்ளவையாகும், வார்ப்புகள், பௌண்டிரிகளில் கொதிக்கும் உலோகத் திரவத்தை அச்சுகளில் ஊற்றித் தயாரிக்கப்படுகின்றன. போர்ஜிங்குகள் உலோகத்தை சம்மட்டியால் தட்டி தேவையான உருக்கொடுக்கப்பட்டவையாகும். கட்டுமான அமைப்புகள், உலோக பாகங்களை ரிவெட் செய்வது இணைப்பதுபோன்ற செய்முறைகள் மூலம் தயாரிக்கப்படுகின்றன.

ஒவ்வொன்றும் 20 டன் எடையுள்ள கனரக வார்ப்புப் பொருள்கள், போர்ஜிங்குகள் ஆகியவற்றைத் தயாரிப்பதற்கான திட்ட வேலை உச்ச கட்டத்தை எட்டிவிட்டிருக்கின்றது. அப்பொருள்கள் இப்போது வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. அத்திட்டத்தில் ஒத்துழைக்க அனேக வெளிநாட்டு ஸ்தாபனங்கள் முன் நுட்ப ஆலோசகர்களாகப் பணியாற்றுவதற்கு அந்த ஸ்தாபனங்களில் ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுப்பதுபற்றி சீக்கிரத்தில் முடிவு செய்யப்படும்

கட்டுமான—யந்திரப் பட்டரையொன்று பிலாயில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. துர்காபூரில் கட்டுமானப்பட்டறை ஒன்று அமைக்கப்படும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில்பௌண்டரி, போர்ஜ்—கட்டுமானத் திட்டத்துக்கு 15 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

**மூலப்பொருள்கள்**

இத்திட்ட நிறைவேற்றத்தின் மூலம், உருக்குத் தொழிற்சாலை யந்திரங்கள் கனரக ரசாயனத் தொழிற்சாலை யந்திரங்கள். யந்திரக் கருவிகள் கனரக மின்சார சாதனங்கள் முதலியவைகளுக்கான யந்திர சாதனங்களைச் செய்வதற்குத் தேவையான 'மூலப் பொருள்கள்' கிடைக்கும்.

இத்தொழில்களில் சிலவற்றுக்கான கனரக யந்திர சாதனங்களைத் தயாரிப்பதற்கு ஒருங்கிணைந்த ஒரு தொழிற்சாலையை அமைப்பதற்கான திட்டங்கள் இப்போது வகுக்கப்பட்டு வருகின்றன. அத்தொழிற்சாலை போர்ஜ்-பௌண்டரி-ஸ்ட்ரச்சர் திட்ட உற்பத்திப் பொருள்களை ஆதாரமாகக் கொண்டு அமைக்கப்படும். இது விஷயமாக இந்திய சர்க்காருக்கு ஆலோசனை கூறுவதற்காக ரஷ்ய கனரக யந்திரக் கட்டுமானத்தொழில் உப மந்திரியின் தலைமையில் ரஷ்ய நிபுணர் கோஷ்டியொன்று இப்போது இந்தியாவுக்கு வந்திருக்கிறது, இதே போன்ற பிரிட்டிஷ் நிபுணர் கோஷ்டியொன்று செப்டம்பரில் எதிர்பார்க்கப்படுகிறது.

இவ்வாருக இந்தியாவில் கனரக யந்திரங்களைச் செய்யும் தொழிலுக்கு அஸ்திவாரமிடப்பட்டு வருகிறது. இதன் மூலம் உருக்குத் தொழிற்சாலைகள் கனரக ரசாயனத் தொழிற்சாலைகள் இதர கனரக தொழில்கள் ஆகியவைகளை அமைப்பதற்கான யந்திர சாதனங்களை இறக்குமதி செய்யும் அவசியம் குறையும். இது மிகவும் பிரம்மாண்டமான முயற்சி சிக்கலான யந்திர உருவ அமைப்புகளைச் செய்வதற்கு இந்திய தொழில் நுட்பச் சிப்பந்திகளுக்கு பயிற்சியளித்தாக வேண்டும். இத்திட்டத்தின் பலன்கள் இரண்டாவது திட்ட காலத்தில் அவ்வளவு அதிகமாகத் தெரியாது ஆனல் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்தியாவிலேயே உருக்குத் தொழிற்சாலை யந்திரங்களைச் செய்து கொள்வதை இது சாத்தியமாக்கும்.

———

### கரூர் டி. மு. கோர்ட்

S. C. 258/56

M. A. P. ஹாஜி அப்துல் ஜப்பார் சாயபு & கோ by partner ஹாஜி அப்துல் ஜப்பார் சாயபு —வாதி

விரிசினம்பட்டி S. குப்பண்ண கவுண்டர் -பிரதிவாதி

பத்து வரவு கணக்குப்படி வாதிக்கு பிரதிவாதியால் ரூ. 168—14—0ம் பின் வட்டியும் செலவும் கிடைக்க செய்திருக்கும் இந்த தாவாவில் 20—8—56வ வாய்தா அன்று ஷை கோர்ட்டில் ஆக்ஷேபணை தெரிவித்துக் கொள்ளாவிடில் Exparte யாக தீர்மானம் ஏற்படும்.

K. முத்துருமலிங்கம்
அட்வகேட்

### திருச்சி டிஸ்டிரிக்கோர்ட்

O. P. 46/56

மீனுக்ஷி அம்மாள் 1
மைனர் சுப்ரமணியன் 2
Next recend தாயார் மீனுக்ஷி அம்மாள் —மனுதார்

ஷை மனுதார் நோட்டீஸ் மனுதார்கள் Indian Scecession act படி லேட் K. S. ராமமூர்த்திக்கு கிடைக்க வேண்டிய ரூ. 8000த்துக்கும்வாரிஸ் சர்ட்டிபிகேட்டுக்குக்கொடுத்த மனு 20—8—56ல் போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளவும்.

G, சுப்பையா தேவர்
அட்வகேட்



## கணபதிராயன் பேசுகிறான்

சிவகுமாரன்

மக்கள் சபையில் நிதிய மைச்சர் நெருப்பை வாரி வீசியபோது ஒரு புதிய செய்தியை வெளியிட்டார். ஆந்திரப் பிரிவினையை ஏற்படுத்திய போது பிரதமர் மந்திரி சபையில் யாரையுமே கலந்துகொள்ளவில்லை என்ற உண்மைதான் அது. அவ்வாறு செய்தது சரியா அல்லவா என்ற பிரச்னையை அரசியல் பண்டிதர்களுக்கே விட்டுவிடலாம். ஆனால் முன்கூட்டியே ஆந்திரப் பிரிவினை ஏற்பட்டது தமிழர்களின் பாக்கியம். அப்படிப் பிரிந்திராவிட்டால் இன்று பம்பாய்க்கு ஏற்பட்ட கதி சென்னைக்கும் ஏற்பட்டிருக்கும். மொழிவாரி நோய்க்கு மருந்தாக ஆந்திரத் தமிழுக்கு ஏற்பட்டிருக்கும். ஏனெனில் ஏற்கனவே தார் கமிஷன் சென்னையைப்பற்றி அற்புதமான யோசனையைக் கூறியிருக்கிறது.

பணிக்கர் அங்கம் வகித்ததால் பீர்மேடு தேவிகுளம் பறிபோயிற்று. ஆந்திராவும் பிரியாமல் பந்துலுசாமியாராவது மொழிவாரிக் கமிஷனில் அங்கம் வகித்திருந்தால் சென்னையோடு செங்கற்பட்டும் சேலமும்கூடப் பறிபோயிருக்கும். அந்த அளவுக்கு நாம் பொட்டி ஸ்ரீராமுலுவுக்கும், தமிழ் முதுமகனுக்கும் கடமைப்பட்டிருக்கிறோம் என்பது உண்மை.

பம்பாய்ப் புண்ணுக்குப் பரிகாரமாக மஹாராஷ்டிரத்தையும் குஜராத்தையும் ஒட்ட வைத்து விட்டார்கள். இது ராஜதந்திரம் மிக்க மகத்தான சரித்திர சம்பவமாக இருக்கலாம். ஆனால் ஜனநாயகமாகாது. இரண்டு மாதங்களுக்குப்பின்புதான் குஜராத் மாகாணக் காங்கிரஸ் கமிட்டி இணைப்பை ஏற்க மறுத்தது. இன்று இணையவைத்த பெருமை மக்கள் சபையினரைச் சேரும். காங்கிரஸின் கோட்டை எனப்படும் கூர்ஜரத்தில் காங்கிரஸுக்கு அவமதிப்பு ஏற்படுத்திய பெருமையும் அவர்களைச் சேரும். காந்திஜி பிறந்த மாகாணத்தில் கதருடை தரித்தவர்கள் துணிவுடன் நடமாட முடியவில்லை. இவ்வளவுக்கும் குஜராத்தியர்களுக்கும் மஹாராஷ்டிரர்களுக்கு மொழி அடிப்படையில் அதிக ஒற்றுமையுண்டு.

ஆனால் பன்மொழி ராஜ்ய ஆவேசக்காரர்கள் ஹைதராபாத் சமஸ்தானத்தைத் துண்டாடுவதைப்பற்றி ஆட்சேபமே தெரிவிக்கவேயில்லை. நான்கு மொழி மாகாணம் அது. அதைப் பன்மொழி மாகாணமாக ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள். அதன் நன்மை நமக்குத் தெரியவில்லை.

கூர்ஜர மஹாராஷ்டிர இணைப்புக்குக் காரணம் நிதியமைச்சரின் துறவு என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அவருடைய கூற்றில் மிகைப்படுத்தப்பட்ட உண்மைகளும் கசப்பான வரலாறுகளும் இருந்தன. எனினும் பம்பாய் நகரத்திற்காகப் பதவியை வீசி இருமொழி மாகாணமென்ற கனியை வீழ்த்திவிட்ட பெருமை அவரையே சேரும். அரசியலிலிருந்தும் பொதுவாழ்விலிருந்தும் அவர் விலகிக்கொள்ளலாம்; ஆனால் நல்லதொரு அத்தியாயத்தை அவர் தொடங்கினர் என்பதற்காக அவருக்கு நமது நன்றிகள்.

கூர்ஜர மராட்டிய இணைப்பை யொட்டித் தட்சிணப் பிரதேசத் தம்பட்டம் வலுக்கிறது. முன்னாளமைச்சர் ஒருவர் கேரளத்திலிருந்து வந்து முதலவரைக் கண்டு சென்றார். ஜனநாயக அரசாங்கத்தில் எவ்வளவோ குறைகள் இருக்கலாம். ஹென்றிமெயின் என்ற அறிஞரின் கூற்றுப்படி அது தாம் குறைந்தவர்களின் அரசாட்சியாகவும் இருக்கலாம்; எப்படியிருந்தாலும் மக்களின் அபிலாஷைகளுக்கு மதிப்புக் கொடுக்கும் ஆட்சிதான் ஜனநாயகம். நாட்டுக்கு நன்மை பயக்கும் திட்டம் என்றாலும் மக்கள் அதை விரும்பாவிட்டால் அதை ஜனங்கள் மீது சுமத்துவது மௌட்டீகம். எந்தப் போர்வையில் புகுந்து கொண்டாலும் மராட்டிய கூர்ஜர இணைப்பு ஒரு தப்பித்துக் கொள்ளும் திட்டம் என்பதை மறக்கக்கூடாது.

—

[5ம் பக்கத் தொடர்ச்சி.]

இன்றைய சிறுகதை உருவாக்குபவர்கள் குறையுடையவர்களாக, துக்கம் காப்பவராக, விளங்குகிறார்கள். அதற்கு ஏற்பத்தான் சிறுகதை உருவாக்குகிறார்கள். இன்றைய சிறுகதைப் போக்கு மாற்றி அமைக்கப்படவேண்டும். நைந்துபோன கருத்தை வைத்துக்கொண்டு எத்தனை விதமாக எழுதினாலும் புதுமையைக் காண முடியுமா? பிணத்துக்கு அலங்கரிப்பது போலத் தான் அது இருக்கும். சிறுகதைத் துறையில் புதுமைக் கருத்துக்கள் வளரவேண்டும். அப்பொழுது தான் சிறுகதை வளமுள்ளதாக இலக்கிய சிறப்புடையதாக ஆக முடியும் என்று கூறியது தராசு,

உண்மை உண்மை முக்காலும் உண்மை என்று உறுதி கூறி விடை பெற்றுச் சென்றார் இலக்கிய அன்பர்.

---

[8ம் பக்கத் தொடர்ச்சி]

னின் கோப மொழியை ஆராயாது முடிவு கூறியது என்ன நீதி? வண்ணான் ஒரு தனி மனிதன். இவன் ஒருவன் மட்டும் எப்படி மக்கள் சமூகத்தின் பிரதிநிதியாக முடியும்? இவன் குரலின் பிரதிபலிப்பை ஜன சமுதாயத்தின் கருத்தாக எப்படி முடிவெடுத்தாய்? இதை உணராமல் உனது பகுத்தறிவு பதுங்கியது ஏன்? அதுமட்டுமல்ல! மக்கள் கருத்தறிய மக்கள் சபையைஏன்கூட்டவில்லை?சர்வாதிகாரமுடன் நடந்து கொண்டாய்! உனது சர்வாதிகார ஆட்டத்துக்கு மக்கள் கருத்தென்றபட்டாடை வேறு இட்சுவாகு குலத்திற்கே இது களங்கம்! வைதேகியை இழந்த உன் வாழ்விலே இனி நிம்மதி ஏது? வேதனை, விம்மல், கண்ணீர், கம்பலை இத்தனையும் உன்னை அலைமோதட்டும்! உனக்கு இதுவே தண்டனை; குற்றமற்ற சீதையை நெருப்பில் இறங்கச் சொன்னது ஒரு குற்றம்! அவளை அபவாதங்கூறிக் கானிலே, அருந்துயரத்திலே, பிரிவாற்றாமையென்னும் பெரும் நெருப்பிலே அவதிப்பட வைத்தது அதை விடப்பெரியகுற்றம்! இதுகர்மவினை! நீ அனுபவிக்காமல் தப்ப முடியாது, இன்றில்லாவிடினும், ஒருநாள் நீயும் நெருப்பிலிடப்படுவாய்!

[தசரதன் சாபமிட்டு மறைகிறான். ராமன் வேதனையால் துடிக்கிறான்.]

5

கலியுகத்திலே, பாரத பூமியிலே, ஆலயங்கள் நிறைந்த தென்னாட்டிலே, கலியை, சனியை விளக்கும் கருப்புடையாளர்கள் தசரதனிட்ட சாபப்படி, சீதைக்கு ராமனிழைத்த துன்பத்துக்காக, ராமனைத் திட்டி ராமசித்திரத்தைக் கொளுத்துகிறார்கள், ராமனும் வினைப்பயனை நுகர்ந்து விட்டான்.

பாகவதர்களும், பக்த சிரோன்மணிகளும் என்னை மன்னிக்க வேண்டுகிறேன். ஆராய்ச்சியாளர்கள் சிந்திக்க வேண்டுகிறேன்.

ஓம் தத் ஸத்

---

# கோர்ட் விளம்பரங்கள்

### திருச்சி டிஸ்டிரிக்ட் கோ,

O. P. No. 71/1956

(இறந்துபோன S. K. பார்த்தசாரதி நாயுடுவினுடைய கடன்கள் விஷயமாக)

பங்கஜவல்லி அம்மாள் —மனுதாரி

மனுதாரி தனக்கு பாத்திய சர்ட்டிபிகேட்டு கொடுக்கவேணுமாய் மனுக் கொடுத்து 25—8—56ல் போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை தேதி பகல் பத்து மணிக்கு ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

(Sd) V. பாலகிருஷ்ணய்யர்,

மனுதாரி அட்வகேட்.

### திருச்சி அடிஷனல் டிஸ்டிரிக்ட் மு. கோர்ட்

O. S. No. 537/55

ஸ்ரீரங்கம் ஜனோபகார பாங்கு Ltd. py its President and Secretary and Treasurer —வாதி

பாப்பா என்கிற பாப்பம்மாள் 1. மைனர் நாகரெங்கராஜன் by கார்டியன் பாப்பம்மாள் 2 —பிரதிவாதிகள்

ஷை நம்பரில் Preliminary decree-யை Final decree செய்ய வாதி மனு கொடுத்து 1—9—56 ஈரங்கி போடப்பட்டிருப்பதால் பிரதிவாதி அன்று ஆஜராகாவிடில் ஒருதலைப்பக்ஷமாக முடிவு செய்யப்படும்.

M. V. Krishnasami Aiyangar,

Vakil for Plaintiff.

### திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 921/56

கணபதியா பிள்ளை —வாதி

சங்கிலிமூப்பன்வகையரு —பிரதிவாதிகள்

குமுமணி வீரமுத்து மூப்பன் மகன் மாணிக்க மூப்பன் 2-ம் பிரதிவாதிக்கு;

உங்கள் வகையரா பேரில் ரூ. 420-க்குத் தொடரப்பட்டிருக்கும் தாவா 28—8—56-ல் ஈரங்கி. அன்று பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி உமது ஆக்ஷேபணைகளைத் தெரிவித்துக் கொள்ளாவிடில் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு பெறப்படும்,

G. ரெங்கசாமி அய்யங்கார்,

வாதி அட்வகேட்.

### திருச்சி சப் கோர்ட்

O. S. 21/56

தி. தமிழ்நாடு செண்ட்ரல் பாங்க்லிமிடெட் திருச்சிராப்பள்ளி by its Managing Director —வாதி

Vs

தோட்டா புருஷோத்தமன் செட்டியார் வகையரு —பிரதிவாதிகள்

காமாக்ஷி அம்மாள் —3-ம் பிரதிவாதி

ராஜகோபால் 5-ம் பிரதிவாதி

ஷை நெ. 3, 5 பிரதிவாதிகளுக்கு தெரிவிப்பதாவது:

வாதிக்கு 1, 2 பிரதிவாதிகளால் எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கும் ஈட்டுப் பத்திரத்தின்படி கிடைக்கவேண்டிய துகைக்கு தாவா செய்து ஷை தாவா 24—8—56ல் 3, 5 பிரதிவாதிகள் ஆஜராவதற்கு போடப்பட்டிருக்கிறது.

M. V. SANKARAN,

Advocate.

### அரியலூர் டி. மு. கோ,

S. C. 880/1956

பக்கிரிசாமி மூப்பனார் —வாதி

சுப்ரமணிய மூப்பனார் —பிரதிவாதி

வாதிக்கு, பிரதிவாதி 2—1—1953 தேதியில் எழுதிக் கொடுத்திருக்கும் புரோநோட்டின்படி ரூ. 345—4—0 கிடைக்க தாவா செய்து, ஷை கேசு ஈரங்கி ஷை கோர்ட்டில் 31—8—56-ல் போட்டிருப்பதால் பிரதிவாதிக்கு கக்ஷி இருந்தால் அன்று கோர்ட்டில் பகல் 11-மணிக்கு ஆஜர் ஆகி தெரிவித்துக் கொள்ளலாம். தவறினால் எக்ஸ்பார்ட்டியாக கருத நேரிடும்.

T. S. VENKATARAMAN,

Advocate.

### துறையூர் டி. மு. கோர்ட்

O. S. 381/1953

I. A. 348-349/1956

ஷை நெ. மனுதார்கள் மு. தா. வேங்கடத்தானூர் கிருஷ்ணசாமிரெட்டியார் 1. ஷையார் தாயார் நல்லம்மாள் 2 இவர்களை சப் 2-3 வாதிகளாக சேர்த்துக்கொண்டு பைனல் டிக்ரி செய்யும்படி மனுக் கொடுத்து 23-8-1956ல் போடப்பட்டிருப்பதை ஊரக்கரை சீனிவாச ரெட்டியார் அறியவும்.

M. S. NARAYANA IYER,

Advocate.

adited. Printed and published by Thiruloka Sitharam at S. N Printers, 24-A. Theradi Bazaar, Trichy. Props. THE SHIVAJI (Private Lt.)